www.saivasamayam.in

திருநந்திதேவர் திருக்கூட்டத்தின் ஓர் சிறு முயற்சி



# சைவ சமயம் - அடிப்படை நுட்பம்
# பயிற்சி கோப்பு 3 - பகுதிகள்

1. சைவ சித்தாந்தம் – அறிமுக சிந்தனைகள்
2. பதி தத்துவம்

வரைவு – Draft

YouTube Channel: Shivakudumbam

சைவ சமயம் அடிப்படை நுட்பம்

பகுதி 1: https://www.youtube.com/watch?v=VRwNOZap3MU

பகுதி 2: https://www.youtube.com/watch?v=KQtTDsWkKTY

பகுதி 3: https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg

# இந்த காணொளியின் நோக்கம்...



சைவ சித்தாந்தம் ஒரு முழுமையான, உயர்ந்த, புவனங்கள் எங்கும் கிடைக்கப் பெறாத ஒரு மாபெரும் சமய புதையலாகும். இதுவே முடிந்த முடிபு ஆகும்.

இந்த காணொளியின் நோக்கம் சைவ சித்தாந்த கொள்கையை எடுத்துரைப்பது அன்று. மாறாக, அதில் உள்ள தத்துவங்களில் வெகு சிலவற்றை எடுத்துரைத்து சிந்திக்க வைப்பதாகும். சைவ சித்தாந்தம் கற்றுக் கொண்டிருப்பவர்களுக்கு எளிதாக புரியும் ஒரு கருவியாகவும், சைவ சித்தாந்தம் அறியாதவர்களுக்கு இதன் தத்துவங்களில் சிலவற்றை எடுத்துரைத்து, சிந்திக்கச் செய்து, அதை முழுமையாக கற்கும் ஆர்வத்தை ஊட்டும் கருவியாகவும் இக்காணொளி அமைக்கப்படுகிறது. சைவ சித்தாந்தம் கற்க விளைவோர் தக்க ஆசான் துணை கொண்டு முழுமையாக பயிலவும்.

இதில் குற்றம் / பிழை இருப்பின் இந்த முகவரியில் சுட்டவும்:
shivathondu14@gmail.com

திருச்சிற்றம்பலம்






## சைவ சமய சாத்திர நூல்கள்

1. திருவுந்தியார் - திருவியலூர் உய்யவந்த தேவநாயனார்
2. திருக்களிற்றுப்படியார் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்
3. சிவஞானபோதம் - மெய்கண்ட தேவநாயனார்
4. சிவஞான சித்தியார் திருநறையூர் அருள்நந்தி தேவநாயனார்
5. இருபா இருபஃது - அருள்நந்திசிவாசாரியார்
6. உண்மை விளக்கம் - திருவதிகை மனவாசகங்கடந்தார்
7. சிவப்பிரகாசம் - உமாபதிசிவாசாரியார்
8. திருவருட்பயன் - உமாபதிசிவாசாரியார்
9. வினாவெண்பா - உமாபதிசிவாசாரியார்
10. போற்றிப்பஃறொடை - உமாபதிசிவாசாரியார்
11. உண்மைநெறி விளக்கம் - உமாபதிசிவாசாரியார்
12. கொடிப்பாட்டு - உமாபதிசிவாசாரியார்
13. நெஞ்சுவிடுதூது - உமாபதிசிவாசாரியார்
14. சங்கற்ப நிராகரணம் - உமாபதிசிவாசாரியார்

**பிறப்பு இறப்பு அற்ற கருணைக் கடல் திருவடி போற்றி !!!**

**சைவ சாத்திர நூல்கள் அருளிய அருளாளர்கள் மலர்த்தாள் போற்றி !!!**

# சித்தாந்த சாத்திரங்கள் 14

**உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் முற்று**

www.saivasamayam.in

திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறிவிளக்கம், சங்கற்ப நிராகரணம் என்பன

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# சைவ சாத்திரங்களின் காலம்

- சிவ வழிபாடும், சித்தாந்த தத்துவங்களும் அநாதியானவை
- இறைவனால் அருளப்பெற்றவை

www.saivasamayam.in

- வேதங்களிலும் திருமுறைகளிலும் பரவிக் கிடந்த தத்துவங்களைத் திருவருளின் விருப்பத்தினால் நூல் செய்யப்பட்டவையே சைவ சாத்திர நூல்கள்
- இந்நூல்கள் செய்யப்பட்ட காலம் 13–14 நூற்றாண்டு
- தத்துவங்களும் சைவ கொள்கைகளும், சிவ வழிபாடும் அநாதியானவை. என்றும் இருப்பவை. 13–14 ஆம் நூற்றாண்டில் தோன்றியவை அல்ல.

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# அருவப் பொருள் – சில உதாரணங்கள்

கண்களுக்குப் புலப்படாதது. ஆனால், மற்ற புலன்களால் அல்லது அதன் விளைவுகளால் உணர்ந்து, இருப்பதை அறியக் கூடியது. பொருள்களும், வெவ்வேறு வித சக்திகளும்

www.saivasamayam.in

திருநந்திதேவர் திருக்கூட்டம்

---

காற்று

உடலோடு ஒட்டியிருக்கும் உயிர்

ஒலி

மனம், மணம்

சக்தி (ஆற்றல்) – மின்சார சக்தி, காந்த சக்தி…

வெப்பம்

wifi

அறிவு

புத்தி

எண்ணம்

**ஆணவ மலம் – அறிவை மறைக்கும் அருவப் பொருள்**

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

## சைவ சமயம்

# முப்பொருள் உண்மை





ஆணவம்

மாயை

கன்மம்

### பதி (இறை)

- இறைவன் ஒருவனே
- பேரறிவு உடைமை
- எண் குணத்தான்
- உயிர்களுக்கு அறிவு, இன்பம், முக்தி வழங்கல்
- புவனங்களை இயக்க திருநடனம்

திருநந்திதேவர் திருக்கூட்டம்

### பசு (உயிர்)



- அருவ நுண்பொருள்
- அறிவுள்ளது, இயங்கவல்லது
- உயிர்கள் எண்ணற்றவை, பிறவியில் சுழல்வது
- சிற்றறிவு உடைமை, அறிவிக்க அறிவது
- பாசம் அல்லது இறைவன் ஏதாவது ஒன்றைப் பற்றியே நிற்கும். தனித்திராது.
- ஆதியில் பாசத்தைப் பற்றி இறைவன் திருவருளால் இறைவனைப் பற்றி இன்புறுவது

### பாசம் (தளை)

- அருவ நுண்பொருள்
- அறிவில்லாத சடப் பொருள்
- உயிர்களை அழுத்தி பற்றும்
- உயிர்களின் அறிவை மறைக்கும்
- மயக்கத்தில் அழுத்தும்
- இறைவனைப் பற்ற இயலாது.

* இறைவன் உயிர்களையும் பாசத்தையும் படைக்கவில்லை. * பதி, பசு, பாசம் இம்மூன்றும் அநாதி. * இந்த மூன்றும் என்றும் இருப்பவை. * மூன்றும் அழிவில்லாதவை.

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.



பிறப்பு

பிறவி எதற்கு ?

இறப்பு





வாழ்கை தருவது → அனுபவம் தருவது → அறிவு

கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். – வள்ளுவர்

www.saivasamayam.in

அறிவின் பயன் ?

அறிவின் பயன் – இறைவனை உணர்ந்து திருவடி தேடுவது

இறைவன் மீது அன்பு, சிவதொண்டு புரிதல்

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம்

(அதாவது, விருப்பு வெறுப்பு அற்ற நிலை, ஆணவ மலம் நீங்குதல், இறைவனுடைய திருவருள் பதிதல்)

முக்தி = நிலையான பேரின்பம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

கேவல நிலை

ஆணவம்

உயிர்

மாயை

கன்மம்

1

சகல நிலை

ஆணவம்

உயிர்

கன்மம்

மாயை

2

பிறவிச்சுழல்

முக்தி

3

சுத்த நிலை



www. saivasamayam.in

# சைவ சமயம்

## உயிரின் நிலைகள்

ஆணவம், கன்மம், மாயை

அருவப் பொருள்

திருநந்திதேவர் திருக்கூட்டம்

உயிர்

ஆணவம்

மாயை

கன்மம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

சைவ சமயம்

# சற்காரிய வாதம்

**எல்லாவற்றிற்க்கும் காரணம் உண்டு. உலக இயக்கத்தின் காரணம் இறைவன். இறைவன் உண்டு.**




## இல்லது தோன்றாது. உள்ளது அழியாது.

Recent Science Philosophies: **“Nothing is lost when a candle is burnt”.** Law of Conservation of Energy: **Energy can neither be created nor destroyed; rather, it transforms from one form to another.**

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

சைவ சமயம்

# சற்காரிய வாதம்

திருநந்திதேவர் திருக்கூட்டம்




- உள்ளதே தோன்றும்.
- இல்லாத பொருள் தோன்றாது.
- உள்ள பொருள் அழியாது; நிலை மாறும்.
- எதில் எந்த பொருள் உள்ளதோ, அதுவே தோன்றும்.
- தோகை விரித்து ஆடும் மயில், முதலில் சிறிய மயில் முட்டைக்குள் உள்ளது.
- முயலுக்கு கொம்பு இல்லை. அது தோன்றவே தோன்றாது.
- மாடுக்கு கொம்பு உண்டு. முதலில் இல்லையானாலும் பின்னர் தோன்றும்.
- படைத்தல், காத்தல், அழித்தல் – இவை வெறும் நிலை மாற்றம் மட்டுமே. இவை யாவும் இங்கே எப்போதும் இருப்பவை.
- எள்ளைப் பிழிந்தால் எண்ணெய் வரும். மணலைப் பிழிந்தால் எண்ணெய் வராது. எள்ளினுள் எண்ணெய் சூக்குமமாய் உள்ளது. மணலில் எண்ணெய் எவ்வகையிலும் இல்லை.

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

சைவ சமயம்

# இறைவன் இருக்கிறான் என நிறுவுதல்

www.saivasamayam.in



## சட்டை

நூல், பட்டன், சாயம், கழுத்துபட்டை என்ற பகுதிகளை இணைத்த தொகுப்பு பொருள். இதை செய்தவன் ஒருவன் உளன். ஒரு காரணத்திற்காக செய்யப்பட்டது.




திருநந்திதேவர்
திருக்கூட்டம்

## கடிகாரம்

பல பகுதிகளைக் கொண்ட தொகுப்பு இணைந்து இயங்குகிறது. செய்தவன் ஒருவன் உளன். காரணமுண்டு.

## புவனம்



- இந்த உலகமும் பல பகுதிகளைத் தொகுத்து இயக்க வைக்கப்பட்டுள்ளது.
- சட்டையும், கடிகாரமும் தன்னைத் தானாக செய்து கொண்டவை அல்ல. அவற்றை ஒருவன் செய்தவன் இருக்கிறான்.
- இவ்வுலகமும் தானாக அமைந்தது அல்ல. இவற்றை இணைத்து இயக்க வைத்தவன் ஒருவன் உளன். அவனே முழுமுதற் கடவுள்.

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# முற்றழிப்புச் செய்பவனே (சங்காரகாரனே) முழுமுதற் கடவுள்

www.saivasamayam.in

சைவ சமயம்





எல்லாத் தொழிலையும் செய்ய வல்லவன் ஒருவனே முழுமுதற் கடவுளாவான். உதாரணம், காத்தல் தொழிலை மட்டும் செய்யும் திருமால், ஒடுக்கும் தொழிலை செய்ய இயலாது.

- ✓ யாவற்றையும் ஒடுக்க வல்லவனே, படைத்தல், காத்தல், அழித்தல் தொழில் செய்யும் தெய்வங்களையும் முற்றிலுமாக ஒடுக்க வல்லவன்.
- ✓ எவன் ஒருவனால், அனைத்தையும் ஒடுக்கி, தன்னுள் வைத்துக் கொள்ள முடியுமோ, அவனாலேயே, அதை மீண்டும் மீளத் தோற்றுவிக்க இயலும். முற்றழிப்புச் செய்ய வல்லவனே முழுமுதற் கடவுள்.

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# இறைவன் தன்நிலையில் எவ்வாறு இருப்பார் ? அவர் தன்மை, குணங்கள் யாவை ?

www.saivasamayam.in

**சொரூப நிலை (தன் சுயநிலை, இயற்கை நிலை)**

- ✓ அருவம், உருவம், அருவுரும் என்ற மூன்று திற திருமேனிகளைக் கடந்த நிலை.
- ✓ ஒரு அடையாளமும் இல்லாத நிலை
- ✓ மனம் வாக்குகளுக்கு எட்டாத நிலை
- ✓ குணங்களுக்கு மேற்பட்ட நிலை
- ✓ ஆனந்தக் குறியான நிலை
- ✓ அற்புதராய், மலரகிதராயுள்ளார்
- ✓ ஓர் ஆதாரமும் இல்லாதவர்
- ✓ ஒரு காலத்தும் சலிப்பற்றவர்
- ✓ சுக வடிவினர், உவமை இல்லாதவர்
- ✓ பசு பாச ஞானத்தால் அறிய முடியாதவர்
- ✓ ஞான உருவானவர், அதிசூக்குமர்
- ✓ விருப்பு வெறுப்பின்றி, பரஞ்சோதியாய் நிற்பவர்
- ✓ மூவகை ஆன்மாக்களுக்கும் முத்தித்தானமாய் நிற்பவர்
- ✓ எவற்றாலும் அளக்கப்படமுடியாதவர்
- ✓ யாவற்றுள்ளும் வியாபித்து இருப்பவர்
- ✓ தவம், யோகம், போகம் ஏதுமற்றவர்

சைவ சமயம்

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

இறைவன் உயிர்களுக்காக கருணை கொள்ளுதல்

சைவ சமயம்

சொரூப நிலை (இயற்கை நிலை)

www.saivasamayam.in

உயிர்கள் மீது பெரும் கருணை கொண்டு ஆணவ மலத்தை நீக்கும் பொருட்டு தன் நிலையிலிருந்து இறங்கி வந்து தடத்தநிலை கொள்ளுதல்

தடத்த நிலை

மூவகை திருவடிவம் கொள்ளுதல்
- அருவம்
- அருவுருவம்
- உருவம்

எண் குணம் கொள்ளல்

உயிர்களோடு ஒன்றாய், உடனாய், வேறாய் நிற்றல்

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# பராபர சிவம் பராபர சக்தி
(அனாதி சிவம், அனாதி சக்தி)

[ பரம்பொருளின் இயற்கை நிலை. செயல் தன்மை அற்றது. சக்தி ஞானமாக இருத்தல் ]

ஆதி சிவன்

www.saivasamayam.in

ஆதி சக்தி

ஆணவத்தில் மூழ்கியுள்ள உயிர்களின் அறிவை விளங்கச் செய்ய அவற்றிற்கு இவ்வுலகை தோற்றுவித்தல்

[ ஞானம் பொது ] நாதம் விந்து [ கிரியை பொது ]

அரூபம்

இச்சை விருப்பம்

[ ஞானம் சிறப்பு ] சிவம் சக்தி [ கிரியை சிறப்பு ]

ஞானம் செய்யும் வழி

[ ஞானம் = கிரியை ] சதாசிவன் அருவுருவம்

கிரியை செயல்

[ கிரியை > ஞானம் ] மகேசுவரன்

[ ஞானம் > கிரியை ] சுத்த வித்தை

உருபம்

திருநந்திதேவர் திருக்கூட்டம்

ஆணவம்

உயிர்

உருத்திரன்

உயிர்களின் பொருட்டு இறைவன் உலகை உருவாக்குதல்

மால்

பிரமன்

சைவ சமயம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

சைவ சமயம்

www.saivasamayam.in



இறைவனின் வைப்பு சக்தி – மாயை. மாயை கண்ணுக்குப் புலப்படாத நுண்ணிய அருவப் பொருள். அந்த சக்தியிலிருந்து விரிந்து தான் 224 புவனங்களும் தோன்றி விரிந்தன.

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# 36 தத்துவங்கள்
(கருவிகள்)

சுத்த மாயை

மூபி
அசுத்த மாயை

நாதம்
விந்து
சதாசிவம்
ஈசுரம்
சுத்தவித்தை

சிவ தத்துவம் (5)

மாயை

வித்தியா தத்துவம் (7)

காலம் நியதி கலை வித்தை அராகம்

புருடன்

நம்ம உடம்பும், உலகமும் வந்த கதை இது

மூலப்பிரகிருதி

ஆன்ம தத்துவம் (24)

www.saivasamayam.in

சித்தம் → புத்தி → அகங்காரம்



சாத்துவிகம் இராசதம் தாமசம்

மனம்

ஞானேந்திரியங்கள்

செவி மெய் கண் நாக்கு மூக்கு

கன்மேந்திரியங்கள்

கால் கை வாய் எருவாய் கருவாய்

தன்மாத்திரைகள்

ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம்

பஞ்ச பூதங்கள்

ஆகாயம் வாயு தீ நீர் நிலம்

சைவ சமயம்

இப்படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 பாருங்கள்.

திருநந்திதேவர் திருக்கூட்டம்

# உயிர்களின் 5 நிலை – ஐந்தவத்தைகள் காரியஅவத்தைகள்

சைவ சமயம்



திருநந்திதேவர்
திருக்கூட்டம்

நனவு – முழு விழிப்பு நிலை. அநேக கருவிகளும் இயங்கும் நிலை. சில கருவிகள் செயல்படாது. 35 கருவிகள் இயங்கும். பொறியுணர்வு மந்தமாய் நிகழும். உயிர் புருவ நடுவில் நிற்கும்.



கனவு – கனவு நிலை. சில கருவிகள் மட்டும் இயங்கும் நிலை. 25 கருவிகள் இயங்கும். கனவு உணர்வு. உயிர் கழுத்தில் நிற்கும்.

www.saivasamayam.in



உறக்கம் – வெகு சில கருவிகள் மட்டும் இயங்கும் நிலை. 3 கருவிகள் மட்டும் இயங்கும். உயிர் நெஞ்சில் நிற்கும்.



பேருறக்கம் – இரண்டு கருவிகள் மட்டும் இயங்கும் நிலை. உயிர் உந்தியில் நிற்கும்.

உயிர்ப்பு அடங்கல் – ஒரே ஒரு கருவி மட்டும் இயங்கும் நிலை. முழு அறியாமையில் அழுந்துதல். உயிர் மூலாதாரத்தில் ஒடுங்கி நிற்கும்.

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

படைத்தல்
காத்தல்
அழித்தல்

படைத்தல்

www.saivasamayam.in

மாயை

உயிர்

நிலைபெற்று
பயன்படுதல்
(காத்தல்)

ஒடுக்குதல்
(அழித்தல்)

சைவ சமயம்

திருநந்திதேவர் திருக்கூட்டம்

- ✓ படைத்தல் என்பது உயிர்களைப் படைத்தல் அன்று. அநாதியாய் இருக்கும் உயிர்களுக்கு மாயையிலிருந்து உடம்பு கருவிகளைப் படைத்து பொருத்துதல்
- ✓ காத்தல்: உயிர்கள் தத்தம் வினைப் பயன்களை நுகர்தல் வேண்டி அவற்றிற்க்குக் கொடுக்கப்பட்ட உடம்பு முதலியவற்றை குறித்த கால அளவு வரை நிற்கும் படி செய்தல்.
- ✓ அழித்தல்: வினைப் பயன்களாகிய இன்ப துன்பங்களை நுகர்ந்த உயிர்கள் இளைப்பு எய்தி நிற்கும். அந்த இளைப்பினை நீக்கும் பொருட்டு இவ்வுடம்பு முதலியவற்றை உயிர்களிடமிருந்து நீக்கி மாயையில் ஒடுக்குதல்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# அத்துவிதம்

உயிர்

இறைவன்

பிரிவின்மை. இரண்டு பொருட்கள் ஒன்றோடு ஒன்று கலந்து நின்று, ஒரே ஒரு பொருளைப் போல் தோற்றம் அளிப்பது. ஆனால், உண்மையில் அவை இரண்டும் வேறு வேறு பொருட்கள். அதே போல, இறைவன் உயிர்களோடு கலந்து உயிர்களை இயக்கி வைத்து, ஓர் உயிர் போன்ற தோற்றத்தை அளிக்கிறான்.

இதுவே அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதன் காரணம்.

www.saivasamayam.in

**இறைவன் உயிர்களோடு ஒன்றாய், உடனாய், வேறாய் இருந்து இயக்குகிறான்.**

சைவ சமயம்

**திருநந்திதேவர் திருக்கூட்டம்**

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# இறைவன் உலகை செயல்படுத்தும் முறை






- ஒரு அரசன் தன் செயல்களை அரசியல் முறைப்படி நடத்துவான்.
- எந்த ஒரு விளையாட்டும், தக்க விதிமுறைகளை வகுத்து, அந்த விதிமுறைகளுக்கு உட்பட்டே நடத்தப்படுகிறது.
- உயிர்களின் இருவினைகள் செலுத்துதலின் படியே இவ்வுகலம் நடத்தப்படுகிறது.
- செம்பிலே இருக்கின்ற களிம்பு போல உயிர்களைப் பற்றியிருப்பது ஆணவ மலம்

www.saivasamayam.in

சைவ சமயம்

**திருநந்திதேவர் திருக்கூட்டம்**

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# இறைவனின் உருவங்கள்





- உலகிற்கு உயிராய் நிற்கும் இறைவன், உருவம் இன்றியே செயற்படுத்தக் கூடுமாயினும், உலகத்தின் செயல்பாடு உயிர்களுக்குப் பயன்படும் பொருட்டு இறைவன் உருவமுடையவனாகிறான்.
- கொடிய பன்றியைக் கொன்று அர்சுனனுக்கு பாசுபதம் கொடுத்தான்
- ஆனைமுகக் கடவுளையும், முருகக் கடவுளையும் உருவம் கொள்ளச் செய்தான்
- கல்லாலின் கீழிருந்து சனாகதி முனிவர் நால்வர்க்கும் மெய்யுணர்வு தந்தான்
- வாதவூராருக்கு குருவாக வந்து உபதேசம் செய்தான்



- பிறப்பு இறப்பு இல்லாத சிவபெருமான் தேவைக்கேற்ப தன் இச்சையால் வேண்டும் உடம்பைக் கொள்வான். அவை மலம் குற்றம் இல்லாத திருமேனியாகும்.
- அவனது சக்தியே உருவமாக அமைவதால் அவன் கொள்ளும் திருமேனிகள் அருட்திருமேனிகளாம். இளைப்பு, களைப்பு, இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு அடைய மாட்டா.





- உருவம் இல்லாத பொருளை உயிர்கள் மனத்தால் நினைக்க இயலாது.
- உயிர்கள் தன்னை நினைந்து வாழ்த்தியும் வணங்கியும் உய்தல் வேண்டும் எனும் கருணையினால், உயிர்களுக்காக அவன் பல வகை திருமேனிகளைக் கொள்கிறான்.

**திருநந்திதேவர் திருக்கூட்டம்**

# சிவனும் சக்தியும் ஒன்றா அல்லது வேறா ?




- சிவமும் சக்தியும் ஒன்றே. இரண்டல்ல.
- சிவம் ஒரு செயலைச் செய்யும் போது அதற்கு தேவையான சக்தியாக மாறி நிற்கிறது.
- பரம்பொருளும் அதன் ஆற்றலும் ஒரே நிலையில் கலந்து நிற்கிறது.
- கதிரவனும் ஒளியும் போல, பூவும் வாசனையும் போல சிவமும் சக்தியும் ஒன்றாகி இருக்கிறது.

**$E = MC^2$**

✓ Mass and Energy are related. Mass can be converted to Energy and Energy can be converted to Mass. How Mass and Energy are related, is what is explained by Einstein in terms of speed of light. பொருளும் ஆற்றலும் ஒன்றிலிருந்து மற்றொன்றாக மாறும் தன்மை உடையவை.

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

சைவ சமயம்

# சிவனும் சக்தியும் ஒன்றா அல்லது வேறா ? உதாரணம்



திருநந்திதேவர் திருக்கூட்டம்

- சுப்ரமணியன் என்ற ஒரு மாவட்ட ஆட்சியர் ஒருவர் தன் வீட்டில் வேட்டியோடு, ஒரு அப்பாவாக தன் செல்லக் குழந்தையை முதுகில் யானையாக சுமந்து கொண்டு விளையாடுவார். அவர் தன் வீட்டைத் தானே சுத்தம் செய்வார். இதுவே அவரது இயற்கை நிலை.
- அலுவலகத்திற்கு சென்ற பின் அவர், கோட் மற்றும் குழாய், டை போட்டு தன் தொழிலை செய்யும் பொருட்டு மிடுக்காக ஏவல் புரிவார். அங்கு அவர் தரையில் கிடக்கும் குப்பையை தானே எடுக்க மாட்டார். ஏவல் கொண்டு நீக்கிடுவார். www.saivasamayam.in
- சுப்ரமணியன் என்பவரும், அப்பா என்பவரும், மாவட்ட ஆட்சியரும் வேறு வேறு மூன்று பேர் அல்லர். ஒரே ஒருவர் தான். தான் இருக்கும் இடம் பொருட்டும், தான் செய்யப் போகும் செயல் பொருட்டும் ஒருவரே வேறு வேறு வேடமிடுகிறார். அவரது இயல்பு நிலை, வீட்டில் இருக்கும் போது இருப்பதே.
- இது போன்றே, சிவம் ஒன்று தான். சக்தி அதற்குள்ளேயே அடங்கியிருக்கிறது. தேவைப் படும் போது தேவையான உருவத்தில் வெளிப்படுகிறது.

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.









www.saivasamayam.in

# சிவபிரானின் அருள் வடிவே விநாயகர், முருகர், பைரவர், வீரபத்திரர். இவர்கள் வேறு சிவம் வேறு அல்ல.

திருநந்திதேவர் திருக்கூட்டம்

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# சிவபிரானின் ஐந்து தொழில்கள்

## படைத்தல், காத்தல் அழித்தல், மறைத்தல் அருளல்

### ஊன நடனம்

அறிவற்ற உயிர்களுக்கு அறிவை நிலைபெறுத்த ஆடும் நடனம்



### சூக்கும ஐந்தொழில்

முற்றழிப்பு காலத்தில் எல்லாவற்றையும் ஒடுக்கி நிற்கும் இறைவன், உலகத்தை மீளத் தோற்றுவித்தற் பொருட்டு அதற்கு ஆவனவற்றைச் செய்வது

www.saivasamayam.in

### தூல ஐந்தொழில்

உயிர்களின் ஆணவ மலம் நீங்குதற் பொருட்டு மாயையிலிருந்து இந்த புவனங்களையும் உடம்பு முதலியவற்றைப் படைத்து,காத்து, ஒடுக்கி, மறைத்து அருளுதல்

திருநந்திதேவர் திருக்கூட்டம்

சைவ சமயம்

### அதிசூக்கும ஐந்தொழில்

உயிரானது புருவ நடுவில் நின்று கருவிகளோடு கூடி, விழிப்பு நிலையிலேயே ஐந்து நிலைகளை அடையும். அப்போது, உயிருக்கு அறிவை நிகழ்விக்கும் இறைவனது செயல் அதிசூக்கும ஐந்தொழிலாம். இது உயிர்களுக்கு உலக அறிவைத் தருகிறது

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

சைவ சமயம்

# உயிர்கள் இறைவனை அறியும் முறை

உருவம், அருவுருவம், அருவம் ⟶ உயிரானது கண், மனம் போன்ற கருவிகள் கொண்டு உணரமுடியும்.

பதியை பசு பாசத்தை அறிவது போல் அறிய இயலாது. அதாவது, பசு, பாசத்தை அறிய உதவும் கருவிகள் இறைவனை அறிய உதவாது.



www.saivasamayam.in

திருநந்திதேவர் திருக்கூட்டம்

**பதி ஞானம்**

இறைவன் திருவருளினால், தனக்கு அறிவை விளங்க வைக்கும் பொருள் ஒன்று உள்ளது. அதுவே பதி என்று அறிவதே பதிஞானமாகும். அப் பதிஞானத்தை விடாமல் பற்றி நின்றால், பதிப்பொருள் இனிது விளங்கும்.

**பசு ஞானம்**

பாசத்தை ஆராய்ந்து அறிந்து உயிர், முதிர்வடைந்து, இவை சடப்பொருட்கள் என்றும், அதை அறியும் தான் வேறு அறிவுள்ள பொருள் என்பதையும் உணரும். இதுவே பசுஞானமாகும்.

**பாச ஞானம்**

கண், மனம் முதலிய கருவிகளைக் கொண்டு பாசத்தைப் பற்றி அறிவது பாசஞானமாகும். (நவீன விஞ்ஞானம் முழுமையும் இதற்குள் சிறு துளியாக அடங்கும்.)

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.

# உலகின் வீதிகள் தோறும் சைவ பாடசாலைகள் அமைப்போம்

## www.saivasamayam.in

## திருநந்திதேவர் திருக்கூட்டத்தின் சிறு முயற்சி

இந்த படம் https://www.youtube.com/watch?v=Ylzz9W7Vljg காணொளியின் பகுதி. சைவசமய அடிப்படை நுட்பம் பகுதி 3 காணுங்கள்.